அவர்களில் நின்றும் நீங்கள் இன்பம் நுகர்ந்தால் அவர்களுடைய கூலிகளை கொடுத்து விடுங்கள் என்று கூறுகிறது? என்று நான் திருப்பிக்கேட்கவும்,.....

அதற்கவர் ஆயத்தில் சொல்லப்பட்டிருப்பது சரிதான். ஆனால் ஹஜ்ரத் உமர் அதை ஹராமாக்கி விட்டனர். முத்ஆ நபிகளார் காலத்தில் ஆகுமாக் கப்பட்டிருந்தது. நான் அதை ஹராமாக்குகின்றேன். இப்போது எவரேனும் இவ்வாறு நடந்தால் அவர்களுக்கு நான் தண்டனை விதிப்பேன் என்பதாகக் கூறுகின்றனர். என்றார்.

அதற்கு நான், ஆச்சரியமாயிருக்கிறது. நீ ஹஜ்ரத் உமரையல்லவா இவ்விஷயத்தில் பின்பற்றுகிறாய்? அதேநேரம் நீ உன்னை உமரைவிட அறிவுள்ளவனென்றும் சொல்லிக் கொள்கிறாய். ஹஜ்ரத் உமருக்கு என்ன அதிகாரமிருக்கிறது? அவர் நபிகளார் ஹலாலாக்கியதை ஹராமாக்கு வதற்கு? நீ குர்ஆனை விட்டுவிட்டு ஹஜ்ரத் உமரின் விருப்பத்தை பின்பற்று கிறாய் என்றேன்.

நான் கூறியதைக்கேட்டு முஹம்மத் ஒன்றும் பேசாது மௌனமாயிருந் தது அவர் அக்கருத்தை ஏற்றுக்கொண்டார் என்பதற்கு ஆதாரமாயிருந்தது. இப்பிரச்னையில் அவரது எண்ணத்தை என் இசைவுக்குத் தகுந்தவாறு திருப்பி அவரது சரீர இச்சையை தூண்டிவிடத் துவங்கினேன். அதற்குத் தோதாக அவரும் ஒரு கட்டுப்பாடற்றவராக இருந்ததால், மெல்ல அவரிடம்; என்ன? நீ முத்ஆவின் மூலம் உன் வாழ்க்கையை இனிமையாக்கிக் கொள்ள விரும்புகிறாயா? என்றேன். அதனை ஆமோதிப்பதைப்போல் அவர் தனது தலையை கவிழ்த்துக்கொண்டார்.

நான் இப்போது எனது குறிக்கோளில் பாதி எல்லைக்கு வந்திருந் தேன். நான் அவரிடம் அதற்கு ஏற்பாடு செய்கிறேன் என வாக்களித் தேன். அதேநேரம் பஸராவிலிருந்த சுன்னிகள் முத்ஆவுக்கு எதிராக இருந்ததால் எங்கே முஹம்மத் அவர்களுக்குப்பயந்து எனது இத்திட்டத் திலிருந்து நழுவி விடுவாரோ என்று பயந்ததால், அவரிடம் நான்; இது நம்மிருவரைத்தவிர வேறு யாருக்கும் தெரியாமலேயே இருக்கும். அத்துடன் முத்ஆவின் மூலம் உன்னுடன் இணையப்போகும் பெண்ணுக்கு உனது பெயரைக்கூட சொல்ல மாட்டேன் என்று தைரியமூட்டி விட்டு, ஆங்கிலேய வெளியுறவுத்துறை அமைச்சகத்தின் மூலம் உளவரிய அனுப்பப்பட்டிருந்த அந்த கிறிஸ்தவப் பெண்ணை தேடிச்சென்றேன். அவள் பஸராவிலிருந்த வாலிபர்களை தன்வலையில் சிக்கவைத்து வழிகெடுத்துக் கொண்டிருந் தாள். நான் அவளிடம் விபரம் முழுவதையும் சொல்லவே அவள் சம்மதித் தாள். தற்போதைக்கு அவளது பெயரை "ஸபிய்யா" என்று வைத்தேன். அதன்பின் ஷைகை அழைத்துக்கொண்டு வருவதாகக் கூறிவிட்டு வந்தேன்.

குறிப்பிட்ட அன்று முஹம்மதை அழைத்துக்கொண்டு ஸபிய்யாவின் வீட்டுக்கு வந்தபோது, அங்கே எங்கள் இருவரைத்தவிர வேறு யாருமில்லை. முஹம்மத் ஒரு அஷ்ரபி மஹ்ரைகொண்டு ஒரு வாரத்திற்கு ஸபிய்யாவுடன் ஒப்பந்தம் செய்து கொண்டார். கருங்கக்கூறின் நான் வெளியேயும், ஸபிய்யா உள்ளேயும் இருந்து முஹம்மத் பின் அப்துல் வஹாபை எங்களின் வருங்காலத்திற்குரிய திட்ட நடவடிக்கைகளுக்காக தயார் செய்து கொண் டிருந்தோம். ஸபிய்யா முஹம்மதை மார்க்கச் சட்டங்களை மாற்றியமைக்க வும், தன்னிச்சையான விருப்பத்திற்குத் தகுந்தவாறு அவரை மாற்றிடவும் அவரது மூளைக்கு உரமேற்றினாள்.

நான் மூன்று நாட்களுக்குப்பின் முஹம்மதை மீண்டும் சந்தித்த போது திரும்பவும் ஒருமுறை மார்க்க சம்பந்தமாக பேசத் துவங்கினோம். இம்முறை பேச்சு மதுவைப் பற்றியதாயிருந்தது. அவர் குர்ஆன் மதுவை தடைசெய்கின்ற வசனத்தை எனக்குக் கூறினார். நான் அவரிடம்,.....

முஆவியா, யஜீத், பனீ உமைய்யா, பனீ அப்பாஸ் போன்ற கலீபாக் களெல்லாம் மது அருந்தவில்லையா? அவர்களிடம் ஹலாலாயிருந்த ஒன்று நமக்கு மட்டும் எப்படி ஹராமாகும்? அவர்கள் நம்மைவிட குர்ஆனையும், சுன்னத்தையும் அதிகமாகத் தெரிந்தல்லவா வைத்திருந்தனர்! பின்னும் அவர்கள் குர்ஆனைக் கொண்டும் நபிவழியைக் கொண்டும் ஆய்வு செய் தது மது ஹராமானது என்பதை அல்ல. மாறுக வெறுக்கத்தக்க ஒன்றென்று தான் முடிவு செய்திருந்தனர்.

அதன்றி யூத கிறிஸ்தவர்களின் வேதங்களில் கூட மது அருந்தலா மென்று பகிரங்கமாகக் கூறப்பட்டுள்ளது. அது எப்படி சாத்தியம்? இறை வனது ஒரு மார்க்கத்தில் ஹலாலாக்கப்பட்ட மது இன்னொரு மார்க்கத்தில் ஹராமாகும்? எல்லா வேதங்களுமே இறைவனால் இறக்கியருளப்பட்டது தானே. அது மட்டுமல்ல. ஹஜ்ரத் உமர், ***என்ன? நீங்கள் மதுவை விட் டும் சூதாட்டத்தை விட்டும் விலக மாட்டீர்களா?*** என்னும் ஆயத் இறக்கப் படும் வரை மது அருந்தியுள்ளார்களே!

இன்னும் மது ஹராமாக இருந்திருந்தால் நபிகளார் உமர்மீது தண் டனையை விதியாக்கி இருப்பார்களல்லவா! எனவே நபிகளார் உமருக்கு தண்டனை விதிக்காதிருந்ததே மது ஹராம் அல்ல என்பதற்குரிய ஆதார மாகும் என்றேன்.

நான் கூறியதனைத்தையும் கவனமாகக் கேட்டுக் கொண்டிருந்தவர் சட்டென்று தன்னை சுதாரித்துக் கொண்டவராக ஒரு அறிவிப்பில் ஹஜ்ரத் உமர் மதுவில் தண்ணீரைக் கலந்து அதன் போதைத் தன்மையை முறித்து அருந்தியுள்ளனர். இன்னும் அவர்கள் மதுவில் ஏற்படும் போதைதான் ஹராமேயன்றி மது ஹராமல்ல. எந்த மதுவில் போதை இல்லையோ அது ஹராம் அல்ல என்றும் கூறியுள்ளனர் எனக் கூறினார்.

முஹம்மத், ஹஜ்ரத் உமர் அவர்களின் கண்ணோட்டத்திற்கு கீழ் காணும் ஆயத்தைக் கொண்டு சரியானதென்பதாக நினைத்துக் கொண்டிருந்தார். **ஷைத்தான் உங்களை மதுவிலும் சூதாட்டத்திலும் உங்களிடையே பகையையும், விரோதத்தையும் உருவாக்கி இன்னும் உங்களை இறை தியானத்தை விட்டும் தொழுகையை விட்டும் விலக்க நினைக்கிறான்** என்பதே.

நான் முஹம்மதுடன் மதுவைக்குறித்து பேசிய அனைத்தையும் ஸபிய்யாவிடம் ஒன்றுவிடாமல் கூறி சமயம் வாய்க்கும்போது அவரை மதுவின் போதையில் வீழ்த்திவிடு என்றும் கூறினேன்.

மறுநாள் ஸபிய்யா என்னிடம், நானும் முஹம்மதும் தேவைக்கதிகமாகவே நேற்று மது அருந்தினோம். அந்தப் போதையில் அவர் நிலை தடுமாறி காச் மூச்சென்று கத்தத் துவங்கி விட்டார். அத்துடன் பலமுறை என்னோடு உறவும் கொண்டார். இப்போது அவரது சித்தம் குழம்பியுள்ளது. அவரது முகத்திலிருந்த களை முழுவதும் மாறிப்போய் பொலிவிழந்திருக்கிறார். சுருங்கக்கூறின் அவர் இப்போது முழுக்க முழுக்க என் கட்டுப்பாட்டில் இருக்கிறார் எனக் கூறியதைக்கேட்டு நான் லண்டனை விட்டுக் கிளம்பும்போது வளர்ந்து வரும் புதிய நாடுகளின் வெளியுறவுத்துறை அமைச்சர் என்னிடம் சொன்னது இப்போது என் நினைவுத்திரையில் வந்து நிழலாடிற்று. அது,......

நாம் ஸ்பெயினை காபிர்களிடமி (முஸ்லிம்களிடமி) ருந்து மது மற்றும் சூதாட்டத்தை கொண்டுதான் மீண்டும் திருப்பிப் பெற்றோம். இப்போதும் அதே இரு சக்தியைக் கொண்டுதான் மற்ற பகுதிகளையும் நாம் திரும்பப் பெற வேண்டும்.

முஹம்மதுடன் மார்க்க ரீதியாக ஒருமுறை மீண்டும் நான் உரையாடும் வாய்ப்பு எனக்கு நேர்ந்தபோது, அவரிடம் நோன்பைப்பற்றி பேசத் துவங்கி குர்ஆன் நோன்பு உங்களுக்கு நன்மையான ஒன்று என்றுதான் கூறுகின்றதேயன்றி நோன்பு உங்கள்மீது வாஜிப் எனக் கூறவில்லையாதலால் நோன்பு முஸ்தஹப்பாகும் என்று கூறவும்,.......

இதைக்கேட்டு முஹம்மத் கடுங்கோபமுற்று வெகுண்டவராக, என்ன! என்னை நீ தீனை விட்டு வெளியேற்ற நினைக்கிறாயா? என்றார்.

அதற்கு நான் முஹம்மத்! தீன் என்பது உளத் தூய்மைக்கும், உயிர்களின் பாதுகாப்புக்கும், நீதத்திற்கும் சொல்லப்படுவதாகும். இத்தன்மைகள் மனிதனை அநியாயத்திலிருந்தும் வரம்பு மீறுவதிலிருந்தும் தடுக்கின்றன. என்ன? ஹஜ்ரத் ஈஸா நபி தீனை முஹப்பத்தென்றும், வழிப்படுவதென்றும் கூறவில்லையா? என்ன? குர்ஆன், நீங்கள் உறுதிபெறும் வரை அல்லாஹ்வை வணங்குங்களென்று கூறவில்லையா? இனி மனிதன் உறுதி பெற்று

விட்டால் மறுமையின் எண்ணம் அவனது உள்ளத்தில் அழுத்தமாகி விட்டால் ஈமான் அவனது மனம் முழுவதையும் நிறைத்து அவன் நற்செயலை புரியும் வழக்கமுள்ளவனுக மாறிவிட்டால் அதன்பின் அவன் நோன்பு வைக்க வேண்டுமென்பதற்கு அவசியமென்ன? இந்நிலையில் அவன் மிக வுயர்ந்த அந்தஸ்த்தை அடைந்து விடுகிருனல்லவா? என்று கேட்க,.......

முஹம்மத் பின் அப்துல் வஹாப் இம்முறை மிகக்கடுமையாக ஆட்சேபித்தார். நான் சொல்வதில் அவருக்கு உடன்பாடு இல்லையென்று மறுத்தார். பின்னர் மீண்டும் ஒருமுறை அவரிடம் நான் தொழுகை வாஜிபில்லை என்றேன். எப்படி? என்று கேட்டார்.

எப்படியெனில் இறைவன் திருக்குர்ஆனில், என்னை நினைப்பதற்காக தொழுகையை நிலை நிறுத்துங்கள் என்றுதான் கூறுகிருன். எனவே தொழுகை என்பதன் கருத்து அவனை நினைப்பது மட்டும்தான். ஆகையால் அவனது திருநாமத்தை உச்சாடனம் செய்துவா என்றேன்.

அதற்கவர், ஆம். பல உலமாக்கள் தொழுகைக்குரிய நேரங்களில் அல்லாஹ்வை திக்ரு மட்டும் செய்வார்களென்றும், தொழ மாட்டார்களென்றும் நான் கேள்விப்பட்டிருக்கிறேன் என்ருர். என்பேச்சை அவர் ஆமோதித்ததைக்கண்ட நான் மகிழ்ச்சியின் எல்லைக்கே சென்று விட்டேன். இருப்பினும் சிறிதுநேர இடைவெளிக்குப்பின் நான் அவரிடம், நான் சொன்னேனென்று தொழுகையை நீ விட்டு விடாதே என்றும் கூறினேன். இதன் விளைவு! அவர் நேமமாக தொழுதுவந்த நிலை மாறிப்போய், நினைத்தால் தொழுவார். இல்லையென்ருல் அதுவுமில்லை என்ருகி விட்டது. அதிலும் குறிப்பாக சுப்ஹுடைய தொழுகை கிட்டத்தட்ட அவரைவிட்டு அறவே நீங்கி விட்டது. அடுத்து இரவில் நெடுநேரம் விழித்துக் கொண்டிருந்ததாலும் ஸுப்ஹுக்கு எழுந்து ஒளுசெய்யும் தைரியமும் அவரை விட்டு நீங்கி விட்டது.

சுருங்கக்கூறின் மெல்ல மெல்ல முஹம்மதிடமிருந்து அவரது ஈமானை வெளியேற்றும் என் முயற்சியில் நான் வெற்றி பெற்றேன். ஒவ்வொரு நாளும் அவரிடம் மிகவும் இனிமையான குரலில் அவர்மீது மிகுந்த அக்கறையுள்ளவனைப் போல் பேசினேன். இதே நிலையில் ஒருநாள் அவரிடம் நான் இறைத்தூதரை மட்டந்தட்டி அவர்களின் மகத்துவத்தை சிதைக்கும் வகையில் பேசவே,........

அவரது முகம் மாறி விட்டது. அதைப்பற்றி அவர் என்னிடம் பேசத் தயாராயில்லை. அதேநேரம் அவர் என்னை நோக்கி, இனியொரு முறை நபிகளாரைப்பற்றி மட்டரகமாக நீ பேசினுல் நமது சிநேகிதம் நிரந்தரமாக முறிந்துபோய் விடும் எனக்கூறவும்,

என் முயற்சியனைத்தும் எனக்கு முன்னாலேயே தண்ணீர் ஊற்றி அணைக்கப்படுவதைக் கண்ட நான் உடனே அப்பேச்சை நிறுத்திக் கொண்டேன். அதன்பின் அதைப்பற்றி நான் அவரிடம் பேசவேயில்லை.

அச்சம்பவத்திற்குப்பின் எனது குறிக்கோள் முழுவதும் முஹம்மத் பின் அப்துல் வஹ்ஹாபை வழிநடத்திச் செல்வதும் அவரை என் வழிக்குத் தோதாக திருப்புவதுமாகவே இருந்தது. நான் அவரது மனதை ஊடுருவி அவரது எண்ணத்தில் ஷியா, சுன்னி போன்ற பிரிவுகளற்ற மூன்றாவது ஒரு புதிய பிரிவை உருவாக்குவதற்கு அவரை தயார்படுத்த வேண்டியிருந்தது. இக்குறிக்கோளை நான் அடைவதற்காக அவரது எண்ணத்தில் ஆட்கொண்டிருந்த அர்த்தமற்ற நேசத்தையும், குருட்டுத்தனமான காழ்ப்புணர்வுகளையும் நீக்கி அவரை தன்னிச்சையான போக்குடைய தன் விருப்பத்திற்கு இசைவான நடைமுறையின் பக்கம் இட்டுச்செல்ல வேண்டியிருந்தது. அம்முயற்சியில் ஸபிய்யாவும் எனக்கு உறுதுணையாக விளங்கினாள். ஏனெனில் முஹம்மத் அவளை ஒரு பைத்தியக்காரனைப்போல் நேசித்தார். ஒவ்வொரு வாரமும் முத்ஆவின் தவணையை அவர் நீட்டிக் கொண்டே சென்று கொண்டிருந்தார். காரணம் ஸபிய்யா முஹம்மதை அந்த அளவுக்கு தன்வலையில் சிக்க வைத்திருந்தாள்.

ஒருநாள் நான் அவரை சந்தித்தபோது, என்ன? நபிகளாருக்கு எல்லா தோழர்களுடனும் நட்பிருந்ததா? எனக்கேட்க, ஆம் என்றார். மறுபடியும் நான்; இஸ்லாமியச் சட்டங்கள் நிரந்தரமானதா? தற்காலிகமானதா? எனக்கேட்க, கண்டிப்பாக நிரந்தரமானவையாகும். இதுபற்றி நபிகளார்; முஹம்மத் நபியால் ஹலாலாக்கப்பட்டவையனைத்தும் மறுமைநாள் வரை ஹலாலாகும். இவ்வாறே முஹம்மத்நபியால் ஹராமாக்கப்பட்டவையனைத்தும் மறுமை நாள்வரை ஹராமாகும் எனக்கூறுகின்றனர் என்று சொல்லவும்,....

நான் சற்றும் தாமதிக்காது நாம் இருவரும் அந்த சுன்னத்தைக் கடைபிடித்தவர்களாக சகோதரர்களாகி விடுவோம் என்றேன். அதை அவர் அங்கீகரித்தார். அதன்பின் நாங்களிருவரும் ஒன்றாகவே இருந்தோம். ஒன்றாகவே எல்லா ஊர்களுக்கும் பயணம் செய்தோம். நான் எனது முயற்சியில் எனது இளமை முழுவதையும் செலவு செய்திருந்தேன். இப்போது எவ்வளவு சீக்கிரம் முடியுமோ அவ்வளவு சீக்கிரம் நான் ஊன்றி வைத்த மரத்தின் பழத்தையும் பறித்துத்தின்ன விரும்பினேன்.

வழக்கம்போல ஒவ்வொரு மாதமும் என் செய்திகளை ஆங்கிலேய வெளியுறவுத்துறை அமைச்சகத்திற்கு தொடர்ந்து அனுப்பி வந்தேன். அங்

கிருந்து எனக்கு வந்த பதில்களனைத்தும் எனக்கு ஊக்கமளிப்பதாகவும், எனது முயற்சியின் வெற்றிக்கு நம்பிக்கையூட்டுவதாகவும், தைரியமளிப்பதாக வும் இருந்தன. இன்னும் முஹம்மதுடன் நான் எனது லட்சியத்தில் மிக வேகமாக முன்னேறிக் கொண்டிருந்தேன். எங்காவது தங்கினாலும், பிர யாணம் செய்தாலும் அவரைத் தனியாக விட்டுவிடாமல் அவருடனேயே ஒட்டிக் கொண்டிருந்தேன். எனது முயற்சி முழுவதும் அவரை சுதந்திர மான போக்குடையவராக மாற்றி மார்க்கக்கொள்கையில் புதிய ஓர் பிரிவை தோற்றுவிக்க வைத்திட முயன்று வந்தேன். இதற்காக அவரிடம் உன்னைத் தலைவனாக ஏற்று உனக்கு வழிப்பட்டு நடக்கும் மக்கள் சமுதாயத்தைக் கொண்ட மிகப்பெரிய எதிர்காலம் உனக்காக காத்துக் கொண்டிருக்கிற தென்று அவ்வப்போது அவருக்குள் ஆசைத்தீயையும் மூட்டி வந்தேன்.

ஒருநாள் நான் அவரிடம், நேற்றிரவு நான் ஒரு கனவு கண்டேன். அக்கனவில் இறுதி நபியைக்கண்டேன். நபிகளார் உபன்னியாசம் செய்யும் உலமாக்களைப்போல் நாற்காலி ஒன்றில் அமர்ந்துள்ளனர். நான் இது வரை கண்டிராத உலமாக்களும் மார்க்கப் பெரியோர்களும் நபிகளாரைச் சூழ்ந்து நாற்புறமும் அமர்ந்துள்ளனர். இதற்கிடையே நீ திடீரென அச் சபைக்குள் வந்து பிரவேசிக்கிறாய். உனது முகத்திலிருந்து ஒளிக்கதிர்கள் வீசிக் கொண்டிருக்கின்றன. நபிகளாரை நீ நெருங்கவும், அவர்கள் எழுந்துநின்று உனக்கு மரியாதை செய்தவர்களாக உனது நெற்றியை முத்தமிட்டு விட்டு, உன்னை நோக்கி,.......

ஓ! என் பெயரைக் கொண்டிருப்பவரே! நீர் எனது கல்வியின் வாரி சும், முஸ்லிம்களின் தீன் துன்யாவை சிறப்பாக்கி வைக்கும் எனது பிரதிநிதி யாகவும் இருக்கிறீர் எனக்கூற, அதைக்கேட்டு நீ, யாரஸுலல்லாஹ்! என் கல்வியறிவை ஜனங்களிடையே வெளிப்படுத்த அஞ்சுகிறேன் என்று கூறு கிறீர். அதுகேட்ட நபிகளார் அச்சத்திற்கு உன்உள்ளத்தில் இடம் கொடாதீர். ஏனெனில் நீர் உம்மைப்பற்றி என்ன நினைத்துக் கொண்டி ருக்கிறீரோ அதைவிடப் பன்மடங்கு நீர் உயர்ந்த அந்தஸ்த்துடையவராக இருக்கிறீர் என்று கூறுகின்றனர் என்பதாக பொய்யான கனவொன்றை கூறினேன்.

இதைக்கேட்டு விட்டு முஹம்மத் பின் அப்துல் வஹாப் மகிழ்ச்சியின் விளிம்பிற்கே சென்று விட்டார். அவர் திரும்பத் திரும்ப என்னிடம் உன் கனவு உண்மையாகுமா? என்று கேட்டுக்கொண்டிருந்தார். நான் அவ ரைத் தொடர்ந்து தேற்றிக் கொண்டிருந்தேன். இக்கனவைக் கேட்டவுடன் அவர் தன் உள்ளத்தில் ஒரு புதிய மத்ஹபைப்பற்றிய அறிவிப்பை வெளி யிட முடிவு செய்து விட்டார் என்பதையும் நான் உணர்ந்து கொண்டேன்.

# ஐந்து :

இதனிடையே லண்டனிலிருந்து வந்திருந்த கடிதம் என்னை உடனடியாக கர்பலா மற்றும் நஜபை நோக்கிச்செல்ல வேண்டுமெனக் கட்டளையிட்டிருந்தது. அவ்விரு நகரமும் ஷியாக்களுக்கு கிப்லாவைப் போன்றும் ஆத்மீகத்தின் மர்கஸாகவும் திகழ்ந்து கொண்டிருந்தன. இவ்விரு நகரங்களைக் குறித்த சுருக்கமான வரலாறு இதுதான்.

நஜப். இங்குதான் ஹஜ்ரத் அலீயின் அடக்கஸ்தலம் இருக்கின்றது. இந்த எல்லையிலிருந்து தான் நகரமே துவங்குகின்றது. ஹஜ்ரத் அலீயின் ஷஹாதத்தின் போது ஆட்சியின் தலைமைபீடமாக இருந்த கூபாவிலிருந்து நஜப் ஐந்து கிலோமீட்டர் தூரமாகும். நடந்துசென்ருல் ஒருமணி நேரமாகும்.

அலீயவர்கள் ஷஹீதாக்கப்பட்டபோது அவர்களின் உடலை அவர்களது மைந்தர் ஹுஸைன் யாருக்கும் தெரியாமல் கொண்டுவந்து நஜபில்தான் நள்ளிரவில் அடக்கம் செய்தனர். ஷியாக்களின் உலமாக்கள் இந்த கப்ரை பெரிதும் மதிக்கின்றனர். உஸ்மானியப்பேரரசின் கலீபாவும் பல்வேறு காரணங்களுக்காக இக்கப்ருக்கு மிகவும் மரியாதை கொடுத்து வந்தார்.

ஈரான் நாட்டு அரசரும் ஷியா மத்ஹபைப் பின்பற்றுபவராக இருந்ததால் நஜபிலிருந்த ஷியா உலமாக்கள் உஸ்மானிய கலீபாக்களுக்கு பெரிதும் கண்ணியமளித்து வந்ததன் மூலம் ஈரானுக்கும் துருக்கிக்குமிடையே சண்டை சச்சரவு ஏதுமின்றி சுமுகமான உறவிருந்தது.

நஜபைச் சுற்றிலும் இருந்த மக்கள் ஷியா பிரிவைச் சேர்ந்தவர்களாயிருந்தனர். அவர்களிடம் படைப்பிரிவுகளோ அதற்குரிய பயிற்சி முறைகளோ எதுவுமில்லை. இம்மக்கள் தங்களின் குலத்தார்களது வாழ்க்கை முறைகளை மேற்கொண்டிருந்தனர். அதேநேரம் உலமாக்கள் நிந்திக்கப்படுவதை வெறுப்பவர்களாயிருந்தனர். இதனுலேயே உஸ்மானிய ஆட்சியாளர்கள் உலமாக்களின் கருத்துக்கு மாறுபட்டு அவர்களை அவமதிக்கும் வகையில் நடக்கும்போது அம்மக்களனைவரும் உஸ்மானிய அரசுக்கெதிராகத் திரண்டுவிடுவர். பின்னும் துருக்கிய ஆட்சி இதைப் புரிந்துகொண்டு மக்களின் விரோதத்தையும் தேடிக்கொள்ள விரும்பாமல் செயல்பட்டு வந்தது.

ஷியாக்களால் மிகவும் மதிக்கப்படும் மற்றேர் இடம் கர்பலா. இந்த நகரமும் இமாம் ஹுஸைனின் ஷஹாதத்திற்குப்பின் நாளுக்குநாள் விரிவடைந்து விட்டிருந்தது. இந்நகரம் கூபாவிலிருந்து 72 கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது. நாள்தோறும் இங்கே மக்கள் கூட்டங் கூட்டமாக வருகைதந்து இமாம் ஹுஸைனை ஜியாரத்துச் செய்கின்றனர். தஜ்லாவும்,

புராத்தும் ஈராக்கின் மாபெரும் நதிகளாகும். இவ்விரு நதிகளைச் சுற்றியுள்ள தோட்டங்களும், வயல்களும் அந்நதிகளால் செழித்துவிளங்கின.

நான் லண்டனுக்குத் திரும்பிச்சென்று வளர்ந்துவரும் நாடுகளின் வெளியுறவுத்துறை அமைச்சரை சந்திக்கும்போது ஈராக்கை நமது கட்டுப்பாட்டுக்குள் கொண்டுவர தஜ்லாவும் புராத் நதியும் சங்கமிக்கும் இடத்தை கைப்பற்ற வேண்டும். அங்கே குழப்பம் ஏற்படும்போது அந்நதிகளின் பாதையை மாற்றிவிட்டால் அவர்கள் ஆங்கிலேயரின் ஆதிக்கத்திற்கு கட்டுப்பட்டு வழிக்கு வந்து விடுவார்கள் என்றும் சொல்ல வேண்டுமென நினைத்துக்கொண்டேன்.

நான் ஒரு வியாபாரியின் வேஷத்தில் நஜப் வந்து சேர்ந்தேன். அங்குள்ள ஷியா உலமாக்களின் மஜ்லிசுகளிலும் வாதப் பிரதிவாதக் கூட்டங்களிலும் சென்று அமரத்துவங்கினேன். வருத்தமான விஷயம் என்னவெனில், அவர்களிடம் கால மாற்றங்களைக்குறித்த சிந்தனை இல்லை. உலகில் நிகழ்ந்து கொண்டுள்ள மாற்றங்களுக்குத் தக்கவாறு மக்களை வழிநடத்தும் யோசனையுமில்லை.

நஜபுடைய உலமாக்கள் உஸ்மானிய அரசை மிகக்கடுமையாக எதிர்ப்பவர்களாயிருந்தனர். அவர்கள் சுன்னீ கொள்கையுடையோராக இருந்தனர் என்பதற்காக அல்ல. மாருக அவர்கள் அநியாயக்காரர்களாயிருந்தனர். மக்கள் அவர்கள் மீது திருப்தி கொண்டவர்களாக இல்லை. இந்நிலையில் தம்மைக் காப்பாற்றிக்கொள்ள அவர்களிடம் எந்த வசதியுமிருக்கமில்லை.

அவர்கள் தங்களின் முழு நேரத்தையும் மார்க்கக் கல்வியிலேயே செலவிட்டுக் கொண்டிருந்தனர். இனி மத்திய கிழக்கு நாடுகளைச்சேர்ந்த பாதிரிகளைப்போன்று புதிய கல்வியின் மீது அவர்கள் கவனம் செலுத்தாதிருந்தனர். சிலவற்றை அவர்கள் தெரிந்து வைத்திருந்தாலும் அவர்களைப் பொறுத்தவரை அவர்கள் தெரியாதவர்களைப் போன்றே காட்சியளித்தனர்.

அவர்களுக்கு உலக அரசியல் நிலைகள்பற்றி எதுவுமே தெரியாதிருந்தது. பின்னும் அதைப்பற்றி யோசிப்பது கூட தேவையற்ற ஒன்றென அவர்கள் கருதிக் கொண்டிருந்தனர். இவர்கள் எத்தனை மௌட்டீகவாதிகள்? உலகம் இன்று விழித்துக்கொண்டது. ஆனால் இவர்கள் இன்னும் தங்களின் அப்பழைய சித்தாந்தங்களை விட்டு விழித்தெழத் தயாராயில்லை. ஏதேனும் ஒருபெரும் அழிவுதான் அவர்களை தட்டியெழுப்ப முடியும். நான் அங்குள்ள சில உலமாக்களிடம் உஸ்மானிய அரசுக்கெதிரான பேச்சைத் துவக்கினல் அவர்கள் அதைப்பற்றி எதுவுமே கூருமல் மௌனம் சாதித்தனர். அவர்களுக்கு இவ்விஷயங்களில் விருப்பமில்லாதிருந்தது. சிலர் என்னை கேலி செய்தனர். இன்னும் சிலர்என்னை உலகைக் குழப்பவந்தவன் என்றும் கூறினர்.

நான் அங்குள்ள ஒரு ஆலிமிடம், எவ்வாறு நபிகளார் அநியாயக் காரர்களை எதிர்த்து போர் புரிந்தார்களோ, அதுபோன்று இன்றுள்ள அநியாயத்தையும் அராஜகத்தையும் எதிர்த்து யுத்தம்செய்து உலக அரங் கில் இஸ்லாத்தை நிலைநிறுத்தும் எண்ணம் உங்களுக்கு இல்லையா? என்று கேட்டபோது,.......

அதற்கவர் அல்லாஹ் நபிகளாரை அப்பணிக்காக என்றே தேர்ந் தெடுத்திருந்தான் என்றுகூற, மீண்டும் நான், நீங்கள் அல்லாஹ்வுக்கு உதவி செய்யுங்கள் அல்லாஹ் உங்களுக்கு உதவி செய்வான் என்று குர் ஆன் கூறுவதால் அநியாயக்காரர்களுக்கு எதிராக நீங்கள் ஏன் வாளை எடுக்கக் கூடாது? என்று திருப்பிக்கேட்கவும், நீ ஒரு வியாபாரி. இதைப் பற்றி பேசுவதற்கு ஒரு தனிக்கல்வி வேண்டும். எனவே அதற்கு நீர் தகுதியானவரல்ல எனக்கூறி என்வாயை அடைத்து விட்டார்.

கர்பலாவில் இரு பெரிய பிரபலமான கப்ருகள். சிற்சில மாற்றங் களோடு ஹஜ்ரத் அலியின் கப்ரைப்போன்றே கட்டப்பட்டிருந்தது. ஒன்று இமாம் ஹுசைனுடைய கப்ரும் மற்றொன்று ஹஜ்ரத் அப்பாஸுடைய கப்ரு மாகும். இங்குள்ள மக்கள் தினந்தோறும் ஜியாரத்துச் செய்கின்றனர். இந்நகரங்களின் வெறிச்சோடிப் போய்விட்ட தோற்றங்கள் எமது லட்சி யத்தை எய்துவதற்கு உரிய சாதனங்களாகக் காட்சியளித்தன.

அங்குள்ள மக்களைக் காணும்போது உஸ்மானிய அரசு அம்மக்க ளின் மீது எப்படிப்பட்ட அடக்குமுறைகளையெல்லாம் கட்டவிழ்த்து விட் டுள்ளதென்பதைப் புரிந்துகொள்ள முடிந்தது. போதாக்குறைக்கு அந் நாட்டு மக்களும் அறிவற்றவர்களாகவும், பேராசை பிடித்தவர்களாகவும் மனம் போனபோக்கில் செயல்படுகின்றவர்களாயுமிருந்தனர்.

ஷியாக்கள் அரசின் அடக்குமுறைகளையும், அராஜகத்தையும் சகித் துக்கொள்ளப் பழகிவிட்டிருந்தனர். அஹ்லெ சுன்னத்தைச் சேர்ந்தவர் களின் நிலையும் இப்படித்தானிருந்தது. அவர்கள் உஸ்மானிய அரசை வெறுத்த போதிலும் தாங்கள் உலகிலேயே சிறப்புக்குரிய அரபிகள் என்னும் ரத்தம் அவர்களின் நாடி நரம்புகளில் ஓடிக்கொண்டிருந்தது. இன்னொரு பக்கம் நபிகளாரின் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் அரசுத்துறைகளில் உஸ் மானிய அரசின் கவர்னரைவிட தாங்களே உரிமையுடையோர் என எண் ணிக் கொண்டிருந்தனர்.

எல்லா ஊர்களுமே வெறிச்சோடிப் போயிருந்தன. அசுத்தமும், சுகாதாரமின்மையும் அம்மக்களின் தலைவிதியாகவே மாறிப் போயிருந்தது. பாதைகளை கொள்ளையர்கள் ஆக்ரமித்துக்கொண்டு வழி பார்த்திருந்து அரசின் பாதுகாப்பின்றி வரும் கூட்டங்களை கொள்ளையடித்தனர். மற் றோர் பக்கம் கோத்திரங்களை காரணமாகக்கொண்டு ஒருவரையொருவர் வெட்டிக் கொன்றுவந்தனர். சண்டை சச்சரவில்லாத நாட்களே இல்லை

யென்னும் அளவிற்கு தினம் தினம் யாராவது ஒருவர் மரணத்தின் கோரப் பிடிக்கு இரையாகிக் கொண்டிருந்தார்.

அறிவீனமும், கல்விக்குறைவும் ஈராக்கை விழுங்கிக் கொண்டிருந் தது. இவையனைத்தும் மத்திய கிழக்கு நாடுகளைச்சேர்ந்த பாதிரிகளின் தொலை தூரக்கனவை பிரதிபலித்துக் கொண்டிருந்தன. குறிப்பாக நஜப் மற்றும் கர்பலாவைச்சேர்ந்த உலமாக்களும் அவர்களிடம் கல்வி கற்று வந்த மாணவர்களும் கூட அறிவீனர்களாயிருந்தனர்.

தேசத்தின் போக்குவரத்து இயக்கங்கள் முழுவதும் ஸ்தம்பித்துப் போயிருந்தன. நோய்களும், வறுமையும், அறிவீனமும், துர்நடத்தையும் மக்களை வளைத்துக் கொண்டிருந்தது. நாட்டின் ஐக்கியம் சிதறிப்போய் அரசுக்கும் மக்களுக்குமிடையே ஒரு ஆழமான இடைவெளி ஏற்பட்டு ஒருவர் மற்றவரை தமது விரோதியாகக் கருதிக் கொண்டிருந்தனர். உல மாக்கள் இறைவனது மார்க்கக்கல்வியில் மூழ்கிப்போய் உலக வாழ்வையே மறந்து விட்டிருந்தனர்.

சுருங்கக்கூறின், நான் கர்பலாவிலும் நஜபிலும் நான்கு மாதம் இருந்தேன். நஜபில் இருந்தபோது ஒரு கொடூரமான நோயால் பாதிக்கப் பட்டு பின்னர் கொஞ்சங் கொஞ்சமாக உடல்நிலை தேறியபின் பக்தாதுக்கு திரும்பினேன். அங்கே வந்ததும் கர்பலா, நஜப், ஹல்லா மற்றும் பக்தாதில் நான் கண்டவையனைத்தையும் தொகுத்து கிட்டத்தட்ட நூறு பக்கங்களுக்கு ஒரு ரிப்போர்ட்டை தயார்செய்து லண்டனிலுள்ள வெளியுறவுத்துறை அமைச்சகத்திற்கு அனுப்பி வைக்குமாறு பக்தாதிலிருந்த வெளியுறவுத்துறை அமைச்சகத்தின் தூதரிடம் கொடுத்துவிட்டு நான் லண்டனுக்கு திரும்பிச் செல்வதற்குரிய உத்திரவை எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன்.

பஸராவை விட்டு கர்பலா மற்றும் நஜபுக்கு வந்துசேர்ந்த சில மாதங்களுக்குப்பின் எனக்கு முஹம்மத் பின் அப்துல் வஹாபைப் பற்றிய ஞாபகம் வந்தது. நான் அவரைக்குறித்து மிகவும் கவலைப்பட்டேன். நான் அவருக்காக மிகவும் கஷ்டப்பட்டிருந்தேன். இருப்பினும் அவர்மீது எனக்கு நம்பிக்கையில்லை. காரணம் அவர் ஒரு நிலையில் நிற்காதவர். அன்றி கடுங்கோபியும் கூட. பேசிக் கொண்டிருக்கும்போதே இருந்திருந் தாற்போல் கோபத்தில் தன்னையே இழந்து விடுவார். இதனால் எங்கே என் முயற்சி முழுவதும் அவர் விஷயத்தில் விழலுக்கிரைத்த நீராகி விடுமோ என்று பயந்து கொண்டிருந்தேன்.

நான் பஸராவை விட்டுப் புறப்பட்ட அன்று அவர் துருக்கிக்குச் செல்ல தயாராகி புறப்பட்டுக் கொண்டிருந்தார். அங்கு சென்று அங்குள்ள மக்களின் கலாச்சாரம், பண்பாடு, நாகரீகம் போன்றவற்றை தெரிந்துகொள்ள விரும்பினார். நான் அவரை மிகவும் சிரமப்பட்டு சாமார்த்தியமாக துருக்கி செல்ல வேண்டாமென்று கூறினேன். இன்னும் அவரிடம், நீர் அங்குபோய்

எதையாவது ஒன்றைப்பேசி அங்குள்ளவர்கள் உம்மை முல்ஹித், ஜிந்தீக் என்று கூறி வெட்டிப் போட்டாலும் போட்டு விடுவார்கள் என்றும் கூறினேன்.

ஆனால் நான் பயந்ததற்குரிய காரணம், அவர் அங்கே சென்று அங்குள்ள அஹ்லெ சுன்னத்துடைய உலமாக்களை தொடர்பு கொண்டு விட்டால் அவர்கள் தமது அசைக்கவியலாத ஆதாரங்களை எடுத்துக் காட்டி அவரை தமது பாதைக்கு மாற்றிவிட்டால் அதன்பின் எனது இத்தனை கால முயற்சியும் அதோ கதி தான்.

முடிவில் அப்துல் வஹாப் பஸராவை விட்டுப்போக வேண்டுமென்ப தில் உறுதியாக இருந்ததால் வேறு வழியின்றி நான் அவரை ஈரானுக்குப் போய் அங்குள்ள ஷீராஜ், இஸ்பஹான் போன்ற நகரங்களை சுற்றிப்பாருங் களென்று கூறினேன். ஏனெனில் ஈரானியர் ஷியா மத்ஹபைப் பின்பற்று வோராயிருந்தனர். அங்குசென்று அவர்களின் கொள்கையை அப்துல் வஹாப் தெரிந்துகொள்ள வேண்டுமென்று நான் விரும்பினேன்.

விடைபெறும்போது அவரிடம் நான், தகிய்யாவை (மறைத்துக் கொள் ளல்) பற்றி உமது கருத்தென்ன? எனக்கேட்க,......

அதற்கவர், சரிதான். ஏனெனில் ஒரு நபித்தோழர் அம்மார் என்பவர் முஷ்ரிக்கீன்களின் மீதிருந்த அச்சத்தினால் தம்மையும் அவர்களிடம் முஷ்ரிக் கென்றே வெளிப்படுத்தி வந்துள்ளார். அன்றி நபிகளாரும் அம்மாரின் இந்நடவடிக்கை பற்றி சைக்கினையும் செய்துள்ளனர் எனக்கூறினார்.

இதுகேட்ட நான், நல்லது. உம்மீதும் இது வாஜிபாகும். நீர் ஈரானுக்குச்சென்று உம்மை ஒரு ஷியாவைப்போல் காட்டிக்கொள்ள வேண்டும். அப்போதுதான் பிரச்னைகளிலிருந்து நீர் தப்பமுடியும். அங்குள்ள உலமாக்களின் தொடர்பும் கிடைக்கும். அத்துடன் ஈரானியரின் பழக்க வழக்கங்கள், கலாச்சாரம் போன்றவற்றையும் நீர் தெரிந்து கொள்ள லாம். இவையனைத்தும் பின்னால் உமது லட்சியத்தை நீர் அடைவதற்கு உறுதுணையாக அமையும் எனக்கூறினேன்.

அதன்பின் அவரிடம் ஜகாத்துடைய தொகை எனக்கூறி ஒரு தொகை யை தந்தேன். போகும்போது வழியில் குதிரையொன்றும் வாங்கி அவருக் குக் கொடுத்தேன். அவருக்கு அது அவசியமாயிருந்தது. அதன்பின் அவரைவிட்டு நான் பிரிந்துவிட்டேன். இதுவரை அவரைப்பற்றிய எந்தத் தகவலும் இல்லை. அத்துடன் நாங்களிருவரும் பஸராவை விட்டுக் கிளம்பும்போது நம் இருவரில் யார் முதலில் திரும்பி வந்தாலும் பஸரா வுக்கு வந்து சேரவேண்டும். அது இயலாவிடில் தம்மைப்பற்றி துருக்கி யின் அப்துர்ரஜாவுக்கு எழுதியனுப்ப வேண்டுமென்றும் பேசிக் கொண்டோம். இருப்பினும் இதுவரை அப்துல் வஹாபைப்பற்றி எந்தத் தகவலும் எனக்குக் கிடைக்கவில்லை.

# ஆறு :

சில நாட்களின் காத்திருத்தலுக்குப்பின் வெளியுறவுத்துறை அமைச்ச கத்திலிருந்து பக்தாதுக்கு செய்தி வந்து சேர்ந்தது. அதில் எனது ஆட் சியாளர் என்னை திருப்பி அழைத்திருந்தனர். நான் லண்டன்வந்து சேர்ந்த பின் வெளியுறவுத்துறை அமைச்சகத்தின் செயலரும், மற்ற உயர் அதிகாரி களும் இணைந்து ஒரு கூட்டத்திற்கு ஏற்பாடு செய்தனர். அக்கூட்டத்தில் நான் சேகரித்த எனது செய்தி முழுவதையும் சமர்ப்பித்தேன். அத்துடன் தஜ்லா, புராத் என்னும் இரு நதிகளைப்பற்றியும் எடுத்துக்கூறினேன்.

ஈராக்கை குறித்து நான் சமர்ப்பித்த எனது செய்திகள் அங்கிருந்த அனைவரையும் கவரும் வகையில் அமைந்திருந்தது. இதற்கு முன்னரும் ஈராக்கைக் குறித்து பல செய்திகளை நான் முன்பே அனுப்பியிருந்தேன். இன்னோர் பக்கம் ஸபிய்யாவும் ஒரு செய்தியை அனுப்பியிருந்தாள். அதுவும் என்செய்தியை ஆமோதிக்கும் வகையில் அமைந்திருந்தது.

அதன்றி அமைச்சகம் எனக்குத் தெரியாமலேயே என்னை கண் காணிக்க சிலரை எனக்குப்பின்னால் அனுப்பி வைத்திருந்த செய்தி பின்னர் எனக்குத் தெரியவந்தது. அவர்களும் எனது நடவடிக்கையை கண் காணித்து அனுப்பியிருந்த செய்தியில் என்னைப் பாராட்டியிருந்தனர். இம் முறை எல்லாமே எனக்குச் சாதகமாகவே அமைந்திருந்தன.

இதனால் செயலரும், அமைச்சரிடம் என்னை சந்திக்க நேரம்கேட்டு அவர் தந்தபின் அமைச்சரைக் காண்பதற்காக சென்றேன். என்னைக் கண்டதும் அமைச்சர் மிகவும் குதூகலத்தோடு என் கைகளைப் பற்றிக் கொண்டார். அவர் என்னிடம் நடந்துகொண்ட விதம் நான் அவரது மனதில் எனக்கென ஒருதனி இடத்தைப் பெற்றிருந்தேன் என்பதைக் காட் டிற்று.

அமைச்சர் குறிப்பாக நான் அப்துல் வஹாபை எந்த குறிக்கோளுக் காக மாற்றினேனோ அதை பெரிதும் பாராட்டினார். அவர் பேச்சுக்கிடையே என்னிடம், முஹம்மத் வெளியுறவுத்துறை அமைச்சகத்தின் மிகப்பெரிய துருப்புச்சீட்டு எனக்கூறியவர், மிகுக்கூடுமையாக என்னிடம், நான் முஹம் மதை அதி முக்கியமான காரியத்திற்கு பயன்படுத்த வேண்டும். வருங்காலத் தில் அதனை செய்ய வேண்டுமென்றும் கூறினார்.

பின்னும் நான் அப்துல் வஹாபை விட்டுப் பிரிந்து வந்தபின் அவரின் நிலைமை என்னவாயிற்றோ என்பதைக்குறித்து கவலையடைந்துள்ளது அமைச்சருக்குத் தெரியவரவே, அவர் என்னை நோக்கி மிகுந்த வாஞ்சை யோடு கவலை கொள்ளத்தேவையில்லை. ஹம்ஃப்ரே! நீ அவருக்கு கற்றுத்

தந்தவையனைத்தும் இன்னும் அவருக்கு நினைவுள்ளது. நமது ஆட்கள் இஸ்பஹானில் அவருடன் தொடர்பு வைத்துள்ளனர். அவர்களிடமிருந்து வந்த செய்தி அப்துல் வஹாப் இதுவரை தனது பழைய நிலையில்தான் இருக்கிறார் எனக் கூறுகிறதென்றும் கூறினர். மேற்கொண்டு அமைச்ச ரிடம் கேட்க எனக்கு அச்சமாயிருந்ததால் விட்டு விட்டேன்.

அதன்பின் ஒருமுறை நான் அப்துல் வஹாபை சந்தித்தபோது, அவர் என்னிடம், இஸ்பஹானில் அப்துல் கரீம் என்ற ஒருவரை சந்தித்தேன். அவர் தன்னை ஒரு எழுத்தாளர் என அறிமுகப்படுத்திக் கொண்டார். அவர் மிகவும் சாமர்த்தியமாக அப்துல் வஹாபை சன்னஞ் சன்னமாக நெருங்கி முடிவில் அப்துல் வஹாபை முழுவதுமாக ஆக்ரமித்திருந்தார்.

அப்துல் கரீமுடன் இருக்கும்போதே சில மாதங்களுக்குப்பின் இஸ் பஹானுக்கு வந்துசேர்ந்த ஸபிய்யாவும் அப்துல் வஹாபை வளைக்க, இம்முறை ஸபிய்யா அப்துல் வஹாபை இரு மாதங்களுக்கு முத்ஆ முறையில் (தவணை) சேர்த்துக் கொண்டாள். ஷீராஜுக்குச் சென்றபோது அவள் அவர்களோடு இல்லை. ஷீராஜில் அப்துல் கரீம் அப்துல் வஹாபுக்காக ஸபிய்யாவைவிட அழகான ஒருபெண்ணை ஏற்பாடு செய்திருந்தார். அவள் ஷீராஜை சேர்ந்த ஒரு யூதப்பெண். அவள் பெயர் ஆசியா. அப்துல் கரீம் இஸ்பஹானிலுள்ள கிறிஸ்தவக் குடும்பத்தை சேர்ந்தவர். இவரும் ஆஸியாவைப் போன்றே ஈரானில் பிரிட்டனின் வெளியுறவுத்துறை அமைச்ச கத்தின் மிகப்பழைய உளவாளி.

சுருங்கச் சொன்னால் அப்துல் கரீம், ஸபிய்யா மற்றும் ஆசியா ஆகிய மூவரும் இணைந்து தமது இரவு பகலின் இடைவிடாத முயற்சி யால் அப்துல் வஹாபை வெளியுறவுத்துறை அமைச்சகத்தின் லட்சியத்தை செயல்படுத்துவதற்குத் தோதாக மாற்றினர்.

அடுத்து வரும் காலங்களில் செயல்படுத்தப்போகும் திட்டங்களுக்கு அப்துல் வஹாபை இசைய வைத்தனர். இங்கே நான் இன்னொன்றையும் குறிப்பிட்டாக வேண்டும். அது, அமைச்சரை நான் சந்தித்துப் பேசிக் கொண்டிருந்தபோது என்னுடன் செயலரைத்தவிர அமைச்சகத்தைச் சேர்ந்த உயர் அதிகாரிகள் இருவர் அங்கிருந்தனர். இதற்குமுன் நான் அவர் களைப் பார்த்ததேயில்லை.

கூட்ட முடிவில் அமைச்சர் என்னைநோக்கி, இப்போது நீ வெளி யுறவுத்துறை அமைச்சகத்தை சேர்ந்த பாராட்டுக்குரிய முக்கியமானவர்களில் ஒருவன் எனக் கூறிவிட்டு, நான் செயலரிடம் சொல்லி விட்டேன். அவர் நமது ஆட்சியின் வேறு சில மறைவான திட்டங்களையும் உனக்கு தெரிவிப் பார். அவை இன்னும் திறம்பட நீ உழைப்பதற்கு உதவும் எனக்கூறினர்.

அமைச்சருடன் ஏற்பட்ட சந்திப்பின் மகிழ்ச்சியில் எனக்கு பத்து நாட்களுக்கு விடுமுறை கிடைத்தது. அவை எனது மனைவியையும், ஒரு வயதேயான என் குழந்தையையும் பார்க்கின்ற வாய்ப்பை எனக்குப் பெற்றுத் தந்தது. பத்துநாட்களின் விடுமுறைக்குப்பின் அடுத்து நான் செய்யப்போகும் வேலைகளின் விபரங்களை கேட்டுத் தெரிந்து கொள்வதற்காக அமைச்சகத் திற்கு சென்றேன். செயலர் என்னை மிகவும் மகிழ்ச்சியோடு வரவேற்றார்.

அப்போது செயலர் என்னிடம், வளர்ந்து வரும் நாடுகளின் கமிஷ னின் விருப்பத்திற்கொப்ப அதன் அமைச்சர் உன்னிடம் இரு ரகசியங்களை கூற வேண்டுமென எனக்கு அனுமதியளித்துள்ளார். அவை உனக்கு தொடர்ந்து ஆற்றப்போகும் பணிக்கு மிகவும் பயனுள்ளதாக இருக்கும். இன்னும் உனக்கு தெரிவிக்கப்போகும் அந்த ரகசியம் நமது அமைச்சகத் திலுள்ள ஒரு சிலரைத்தவிர வேறுயாருக்கும் தெரியாது. இதைச் சொல்லியவர் என் கரத்தைப்பற்றி அமைச்சகக் கட்டிடத்திலுள்ள ஒரு அறைக்கு என்னை அழைத்துச்சென்றார்.

அந்த அறையில் வட்டமான ஒரு மேஜை. அதைச்சுற்றி சிலர் அமர்ந்திருந்தனர். அவர்களைக்கண்டு நான் "வீல்" என்று அலற நினைத்து அச்சப்தம் தொண்டையிலேயே அமிழ்ந்து போனது. நான் கண்டது இதுதான்.

1. அப்படியே அச்சு வார்த்தாற்போல் உஸ்மானியப் பேரரசுடைய கலீபாவின் உருவமுள்ள ஒருவர். துருக்கி மற்றும் ஆங்கிலத்தில் சரள மாக பேசிக் கொண்டிருந்தார்.

2. இஸ்த்தான்புல்லை சேர்ந்த ஷைகுல் இஸ்லாமின் ஒட்டிய உருவ மைப்புக் கொண்ட ஒருவர்.

3. ஈரானிய சக்ரவர்த்தியின் தோற்றத்தைக் கொண்ட உருவம்.

4. ஈரானிய தர்பாரிலுள்ள ஷியா ஆலிமின் முழு தோற்றமுள்ள ஒருவர்.

5. நஜபிலுள்ள ஷியாக்களின் தலைவரது உவமைகளை கடந்த உருவமுள்ள ஒருவர்.

கீழே காணப்படும் மூவரும் பார்ஸி மற்றும் ஆங்கிலத்தில் உரையாடிக் கொண்டிருந்தனர். அந்த ஐவருக்கும் அருகில் ஒரு பிரைவேட் செயலர் நின்றுகொண்டு அவர்கள் பேசுவதை குறிப்பெடுத்து மொழியாக்கம் செய்து கொண்டிருந்தார்.

இந்த பிரைவேட் செக்ரட்டரிகள் ஐந்துபேரும் உண்மையான அரசர் களிடம் வெகு நாட்கள் பழகியவர்களைப் போலிருந்தது அவர்கள் நடந்து கொண்டவிதம். மேற்கண்ட ஐவரும் உண்மையான சக்கரவர்த்திகள் மற்றும் உலமாக்களின் குண நலன்கள், பழக்க வழக்கங்களைக்கொண்டு மிகக்கவனமாக போலிகளாக அவர்கள் உருவாக்கப்பட்டிருந்தனர்.

வெளியுறவுத்துறை அமைச்சகத்தின் செயலர் முன்னுல்வந்து இந்த ஐவருக்கும் நாம் இஸ்த்தான்புல், தெஹ்ரான் மற்றும் நஜப் பற்றிய முழு விபரங்களையும் விளக்கிக் கூறியிருக்கிறோம். இப்போது அவர்கள் அசல் சக்ரவர்த்திகளைப் போலவே பதிலளிக்கத் தயாராக உள்ளனர். ஹம்ஃப்ரே நீ விருப்பப்பட்டால் அவர்களை பரீட்சித்துப் பார்த்துக் கொள்ளலாமெனக் கூற, நான் அவர்களில் ஒருவரை நோக்கி......

கிப்லா! வகஃபா அவர்களே! நீங்கள் உங்களைப் பின்பற்றும் ஷியாக்களிடம் சுன்னத் வல் ஜமா அத்தினர்க்கும் உஸ்மானிய பேரரசுக்கெதிராகவும் போர் தொடுக்க வேண்டுமென்று கட்டளையிடுவீர்களா?

அதற்கந்த போலி ஷியாத் தலைவர், சிறிது நேரம் யோசித்துவிட்டு பின்னர்; நான் பொதுவான போருக்கு அனுமதி வழங்கமாட்டேன். ஏனெனில் அவர்கள் சுன்னி முஸ்லிம்கள். இன்னும் திருக்குர்ஆன் முஸ்லிம்கள் ஒருவர் மற்றவருக்கு சகோதரர் எனக்கூறுவதால், உஸ்மானிய அரசு அராஜகத்தையும், அடக்குமுறையையும் கட்டவிழ்த்துவிடாதவரை நன்மையை ஏவி தீமையை தடுத்தல் என்னும் வரம்பிற்கு உட்பட்டே நான் போருக்கு அனுமதியளிப்பேன். காரணம் அராஜகத்தை அராஜகம் கொண்டுதான் முறிக்க வேண்டும் என்று கூறினர்.

ஹம்ஃப்ரே : யூதர்களும், கிறிஸ்தவர்களும் நஜீஸ்கள் எனக் கூறப்படுவது பற்றி தங்களின் கருத்தென்ன? அவர்கள் உண்மையாகவே நஜீஸ்கள் தானு?

போலி தலைவர் : ஆம். அவ்விரு பிரிவினரும் நஜீஸ்களே. முஸ்லிம்கள் அவர்களை விட்டு விலகியிருக்க வேண்டும்.

ஹம்ஃப்ரே : அதன் காரணமென்ன?

போலி தலைவர் : இது உண்மையில் நடுநிலைக்குரிய பிரச்னை. ஏனெனில் அவர்கள் நம்மை காபிரெனக் கூறுவதோடு நமது நபியையும் பொய்ப்பிக்கின்றனர்.

ஹம்ஃப்ரே : இறைத்தூதர் தூய்மையைப்பற்றி மிகவும் வலியுறுத்தி தூய்மை ஈமானின் அடையாளம் எனக்கூறிய பின்னரும் ஹஜ்ரத் அலியின் தர்காவிலும், கடைவீதிகளிலும் இத்தனை சுகாதாரமின்மை ஏன் காணப்படுகிறது?

போலி தலைவர் : கண்டிப்பாக. இஸ்லாம் தூய்மையை ஈமானுக்குரிய ஆதாரமென்றுதான் கூறுகிறது. என்ன செய்வது? உஸ்மானியப் பேரரசின் கவனமின்மையும், தண்ணீர் பற்றாக்குறையும் தான் இதற்கு காரணமாகும்.

மனதிற்கு நிம்மதியளிக்கும் விஷயம் யாதெனில் அப்போலி தலைவரின் உடனுக்குடன் தரப்பட்ட பதில் முழுவதுமே அசல் தலைவரின் பதிலுக்கு ஒத்திருந்தது தான். ஆனால் உஸ்மானியப் பேரரசின் கவன

பின்மை என்னும் வார்த்தை அந்த அசல் தலைவரால் சொல்லப்படாத ஒன்று. போலித்தலைவர் தனது தரப்பில் சேர்த்துச்சொன்ன வார்த்தையாகும்.

இன்னும் அப்போலித்தலைவரின் பதிலைக்கேட்டு நான் திகைப்பில் மூழ்கியிருந்தேன். காரணம் அசல் தலைவரைப்போலவே எல்லா கேள்விகளுக்கும் பார்ஸி மொழியிலேயே பதிலளித்ததுதான். பின்பு செயலர் மீண்டும் என்னைநோக்கி; மற்ற நால்வரிடமும் கேள்வி கேட்பதாயின் கேட்கலாம். அவர்கள் அசல்களைப்போலவே உனக்கு பதிலளிப்பர் எனக் கூறவும், நான் இஸ்த்தான்புல்லை சேர்ந்த ஷைகுல் இஸ்லாம் அற்புத ஆபந்தியின் பேச்சுக்கள், பழக்க வழக்கங்கள் முழுவதும் எனக்கு இன்னும் நினைவிருக்கிறது. எனவே அற்புத ஆபந்தியைப்போலவே உள்ள போலியிடம் சில கேள்விகள் கேட்கிறேன் எனக்கூறி கேட்கத் துவங்கினேன்.

ஹம்ஃப்ரே : ஆபந்தி சாஹிப்! என்ன? உஸ்மானிய கலீபாவுக்கு வழிப்படுவது வாஜிபா?

போலி ஆபந்தி : ஆம் என் மகனே! அவருக்கு வழிப்படுவது அல்லாஹ் மற்றும் அவனது ரஸூலுக்கு வழிப்படுவதைப் போன்றாகும்.

ஹம்ஃப்ரே : எந்த ஆதாரத்தின் அடிப்படையில்?

போலி ஆபந்தி : அல்லாஹ்வுக்கும் அவனது ரஸூலுக்கும் இன்னும் உங்களில் ஏவுகின்றவர்களுக்கும் வழிப்படுங்கள் எனத் திருக்குர்ஆன் கூறுவதை நீ கேட்டதில்லையா?

ஹம்ஃப்ரே : அல்லாஹ்வின் கலீபா என்பவர் "உலில் அம்ர்" எனில், இறைவன் நம்பிது யஜீதுக்கும் வழிப்பட வேண்டுமென்று கட்டளையிடுகிறான். ஏனெனில் அவன் அப்போது கலீபாவாக இருந்தான். அந்நேரம் அவன் மதீனாவின் கவர்னருக்கு இமாம் ஹுஸைனை கொன்றுவிடுமாறு கட்டளையுமிட்டான். இந்நிலையில் வலீதுக்கு எப்படி வழிப்பட வேண்டுமெனக் கட்டளையிடுவான்? அன்றி வலீத் குடிகாரனுகவுமல்லவா இருந்தான்?

போலி ஆபந்தி : மகனே! யஜீத் அல்லாஹ்வின் தரப்பில் முஃமின்களுக்கு அமீராக இருந்தார். ஆனால் இமாம் ஹுஸைன் கொல்லப்பட்ட விஷயத்தில் அவரிடம் தவறு நேர்ந்துவிட்டது. அதற்காக அவர் பின்னர் தௌபாவும் செய்தார். மதீனாவில் ஏற்பட்ட கலவரம் அங்கிருந்த மக்களின் தலைமைத்தனத்திற்குரிய போட்டியின் விளைவால் நிகழ்ந்த ஒன்றும், யஜீதுக்கு வழிப்படாததுமே காரணமாகும். அதில் யஜீதின்மீது எந்தக் குற்றமுமில்லை. ஆனால் வலீத் அவன் குடிகாரன் என்பதில் சந்தேகமில்லை. ஆனால் மதுவில் தண்ணீரை கலந்து அதன் போதையை முறித்த பின்னரே அவன் குடித்து வந்தான். இது இஸ்லாமிய மார்க்கத்தில் ஆகுமான ஒன்றாகும்.

நான் முன்னரே இஸ்த்தான்புல்லில் மதுவைப்பற்றி அசல் ஷைகுல் இஸ்லாம் ஆபந்தியிடம் கேட்டுத் தெரிந்து வைத்திருந்தேன். அப்போது அவர் சொன்ன பதிலுக்கும் இந்தப்போலி சொன்ன பதிலுக்குமிடையே சில சிறிய மாற்றமே தெரிந்தது. நான் அஸலில் இருந்து ஒரு நகல் மனிதரை வடிவமைத்ததை சிலாகித்தவனாக செயலரைப்பார்த்து, சரி. இதைக்கொண்டு என்ன பிரயோஜனம்? என்று கேட்டேன்.

அதற்கந்த செயலர், நாங்கள் முதலில் அரசர்கள் மற்றும் சுன்னி, ஷியா உலமாக்களின் சிந்தனை இன்னும் அவர்களின் பழக்க வழக்கங்களை வடிவமைக்கிறோம். அதன்பின் அவர்களைப்போன்ற போலிகளை உருவாக்கு கின்றோம். பிறகு ஒவ்வொரு தேசத்தின் மார்க்கம் மற்றும் அரசியல் நிலைகளுக்குள் அங்குள்ளோர் நமக்கெதிராக செயல்படத் துவங்கும்போது அவர்களது முயற்சியை நாம் நிர்மூலப்படுத்த எல்லா வழியிலும் நமது சக்தியை பயன்படுத்தி இப்போலிகளை அங்கே கொண்டுபோய் சேர்க்கிறோம்.

அன்றி நமது உண்மையான விரோதி எங்கே இருக்கிறான் எனத் தெரிந்து கொள்வதற்காக நமது முழு சக்தியை எல்லா பகுதிகளிலும் பரப்புகிறோம். இவ்வாறு அங்கே நுழைக்கப்படும் நமது போலிகள் ஆங் காங்கே நமக்கு உதவியாக, அரணாக செயல்படுவதுடன், இஸ்லாமியச் சட்டங்களிலும் அதன் செயல்பாடுகளிலும் அங்குள்ளோரிடையே சந்தேகத் தையும், குழப்பங்களையும் ஏற்படுத்தி அவர்களின் கொள்கையை தள்ளப் பட்ட ஒன்றெனும் நிலையினை உருவாக்குகிறோம்.

இன்னும் முஸ்லிம்களிடையே கருத்து வேற்றுமை, பிரிவினை, குழப்பம் மற்றும் முஸ்லிம்களது கொள்கையை ஆட்டங்காணச் செய்வதற்காக இத் தகைய நடவடிக்கைகள் இறுதியாக பலன்கொடுக்கும் நிலைகளெனக் கருது கிறோம். அதன்பின் செயலர் என்னிடம் ஆயிரம் பக்கங்களைக் கொண்ட நூல் ஒன்றை படித்துப்பார்க்க வேண்டுமெனக் கூறித்தந்தார்.

அந்நூலில் அசல் மற்றும் போலி மனிதர்களது நடவடிக்கை, பேச்சு, அவர்களது உருவங்களுக்கிடையே உள்ள ஒற்றுமை வேற்றுமை அவர் களை எதிர்ப்பதால் எற்படும் விளைவுகள் அவர்களின் எண்ணிக்கை போன்றவை குறிக்கப்பட்டிருந்தன. அந்நூலிலிருந்து நான் உலக முஸ்லிம் களின் படைபலம், பொருளாதாரம், கல்வி மற்றும் மார்க்கச் சட்டங்கள் போன்றவற்றிலிருந்து பிரிட்டானிய அரசின் எதிர் நடவடிக்கைகளுக்குரிய திட்டங்களனைத்தையும் தெரிந்துகொள்ள வேண்டியிருந்ததால் அந்த நூலை வீட்டிற்கு கொண்டு போனேன். அதை கிட்டத்தட்ட மூன்றுவாரம் துவக்கத்திலிருந்து கடைசிவரை மிகக்கவனமாக வாசித்தேன். பின்பு குறிப்பிட்ட நாளன்று அந்நூலை கொண்டுபோய் வளர்ந்துவரும் நாடுகளின் வெளியுறவுத்துறை அமைச்சகத்திடம் திருப்பிக்கொடுத்தேன். நூல் மிகவும்

சிரமப்பட்டு உருவாக்கப்பட்டிருந்தது. அதில் படித்தவர்கள், அரசியல்வாதிகள், இஸ்லாமிய மக்களின் மார்க்கக் கொள்கைகள் போன்றவை மிக அற்புதமாக அலசப்பட்டு அவற்றின் முடிவும் விபரிக்கப்பட்டிருந்தது. படித்தவர் பிரமித்துப் போய் விடுவார். எழுபது சதவீதம் எதார்த்தத்தை வளைத்துக் கொண்டிருந்தது. அந்நூலில் முப்பது சதவீதம்மட்டுமே சிறிது வேறுபாடு காணப்பட்டது. நூலை வாசித்து முடித்தபின் எனக்குள் ஏற்பட்ட நம்பிக்கை நிச்சயம் எனது ஆட்சியாளர்கள் தமது குறிக்கோளை எய்தி விடுவார்கள் என்பதே. நூலில் விபரிக்கப்பட்டுள்ளதை பார்க்கும்போது முஸ்லிம்களின் ஆட்சி ஒரு நூறு ஆண்டைக்கூட தாண்டாது. அதற்குள் அவர்களின் ஆட்சி அஸ்தமித்து விடும் என்றே தெரிந்தது.

நான் செயலரை சந்தித்த பின்னரே, வளர்ந்து வரும் புதிய நாடுகளின் வெளியுறவுத்துறை அமைச்சகம் உலகிலுள்ள அனைத்து நாடுகளிலும் அவை தங்களின் ஆட்சிக்கு கீழிருந்தாலும் சரி. இல்லாவிட்டாலும் சரி. இதுபோன்ற போலிகளை உருவாக்கி அவர்களின் மூலம் எல்லா தேசங்களையும் தங்களது அதிகார வரம்பின் கட்டுப்பாட்டிற்குள் இறுக்குவதற்குரிய ஏற்பாடுகளை செய்துள்ளது என்பதைத் தெரிந்து கொண்டேன்.

செயலர் தனது பேச்சினூடே என்னிடம், இதுதான் அந்த முதல் ரகசியம். அமைச்சரின் அனுமதியின் பேரில் உன்னிடம் சொன்னேன். இரண்டாவதாக இன்னொரு ரகசியமும் இருக்கிறது. அது நீ வாசித்த நூலின் இரண்டாம் பாகத்தில் உள்ளது. ஒரு மாதத்திற்குப்பின் அதை உனக்கு காட்டுவோமென்று கூறினர்.

நான் இரண்டாவது நூலை வாங்கிவந்து படிக்கத் துவங்கினேன். இது முதல் நூலை முழுமையாக்கும் வகையில் அமைந்திருந்தது. இதில் இஸ்லாமிய நாடுகளைப்பற்றிய பல புதியசெய்திகளையும், வாழ்வியல் நிலைகளில் ஷியா, சுன்னி போன்ற பிரிவாரிடையே நிலவிவந்த கருத்து வேற்றுமையுடைய அகீதாக்கள், சிந்தனைகள்,சட்டங்கள் (இவைகள் தான் அவர்களைப் பலவீனப்படுத்திக் கொண்டிருந்தன.) மற்றும் முஸ்லிம்களின் சோம்பேறித்தனம், கவனமின்மை போன்றவற்றை குறித்து அலசப்பட்டிருந்தது.

இன்னும் அந்நூலில் முஸ்லிம்களை பலவீனப்படுத்துவதற்கும், அவர்களின் ஒருங்கிணைந்த பலத்தை முறியடிப்பதற்கும் உரிய திட்டங்களும் தரப்பட்டிருந்தன. இதில் முஸ்லிம்களிடையே வேர் விட்டிருந்த அவர்களின் பலவீனங்கள் இதுதான்.

1. ஷியா, சுன்னிகளுக்கிடையே இருந்துவந்த கருத்து வேறுபாடுகள்.

i. ஆட்சியாளர்களுக்கும், மக்களுக்குமிடையே நிலவி வந்த கருத்து மோதல்கள்.

ii. ஈரானிய, உஸ்மானிய ஆட்சியாளர்களிடையே ஏற்பட்டிருந்த மோதல்கள்.

iii. கோத்திரத்தார் மத்தியில் வேர் விட்டிருந்த கருத்து வேற்றுமை கள்.

iv. உலமாக்களுக்கும், ஆட்சியிலிருந்த அதிகாரிகளுக்குமிடையே நிலவி வந்த தப்பான எண்ணங்கள்.

2. கிட்டத்தட்ட எல்லா முஸ்லிம் நாடுகளிலும் நிலவியஅறிவின்மை, மௌட்டீகங்கள் போன்றவை.

3. பிடிவாதம், விரோத மனப்பான்மை, அன்றுட வாழ்வைப்பற்றிய அறிவின்மை, உழைப்பின் குறைவு.

4. வாழ்வின் லட்சியம் குறித்த கவலையின்மை, பொறுப்பற்றத்தனம், சுவனத்தின் எதிர்பார்ப்பில் எல்லைமீறிய வணக்கம். இவை இவ்வுலகின் கபிட்சத்திற்குரிய வாழ்க்கையின் பாதைகளை மூடிக் கொண்டிருந்தன.

5. கர்வம், அரசர்களின் எல்லைமீறிய அடக்குமுறை, அராஜகம்.

6. அமைதியும், நிம்மதியும் பறிபோய்விட்ட நிலை. நகரங்களின் மத்தியிலும் தெரு ஓரங்களிலும், பாதைகளிலும் அமைதியற்ற ஓர் இறுக்க மான நிலை. சரியான மருத்துவ வசதியின்மையாலும், ஆரோக்கியமற்ற சூழ்நிலைகளாலும் ஒவ்வோர் ஆண்டும் காலரா போன்ற நோய்களால் வளர்ச்சி பெற்ற பகுதிகளில் பலர் துர்மரணமடைதல்.

7. நகரங்கள் வெறிச்சோடிப் போயிருத்தல், வயல்களுக்கு தண்ணீர் பற்றுக்குறை, வயல்களும் விவசாய நிலங்களும் தேவைக்குக் குறைவாக இருத்தல்.

8. அரக அலுவலகங்களில் தவருனவர்களை அமர்த்துதல், சட் டங்களின் கட்டுப்பாட்டில் போதிய கவனமின்மை. குர்ஆனையும், ஷரீஅத் துடைய சட்டங்களையும் மதித்தாலும் அவற்றை செயல்படுத்துவதில் அக் கறையின்மை.

9. பிற்பட்ட மக்களுக்கு மத்தியில் நியாயமற்ற நீதிமுறை, எல்லாப் பகுதிகளிலும் பொதுவாக வறுமை, நோய் போன்றவற்றின் ஆக்ரமிப்பு.

10. முறையாக பயிற்சி பெருத படைகள், ஆயுதங்கள் மற்றும் எதிரிகளை முறியடிக்கத் தேவையான சாதனங்களின் பற்ருக்குறை, இன் னும் இருக்கின்ற படைகளுக்கு போதிய போர் பயிற்சி இல்லாமை.

11. பெண்களை கேவலப்படுத்துதல், அவர்களின் உரிமைகளை தர மறுத்தல்.

12. நகரங்கள், கிராமங்கள் போன்ற பகுதிகளில் சுகாதாரமின்மை, எங்கு பார்த்தாலும் சவுக்குகள் சுண்டப்படும் சப்தம், தெருவோரங்கள், நகர்ப்பாதை, இன்னும் கடைவீதிகளில் கால வரையறையற்ற வியாபாரக்

கூடங்களின் ஆக்ரமிப்பு போன்றவையாகும்.

முஸ்லிம்களின் பலவீனங்களை வரிசைப்படுத்திக் காட்டிய நூல் இப்போது உண்மையையும் அடையாளம் காட்டியது. அதாவது இஸ்லாமிய ஷரீஅத்துடைய சட்டங்கள் முஸ்லிம்களது இத்தகைய வாழ்க்கை முறைகளை ஒருசிறிதும் மாற்றவில்லை. எனினும் இங்கு ஒன்றை அவசியம் சொல்ல வேண்டும். அது முஸ்லிம்களது இஸ்லாமிய உயிரோட்டமுள்ள வாழ்க்கையை அவர்களுக்கு தெரியாமலாக்க வேண்டும் என்பதே. இன்னும் அவர்களை ஹகிகிய்யான அசல் மார்க்கத்தின் பக்கம் செல்ல விடாமலும் தடுக்க வேண்டும் என்பதுமாகும்.

அதன்பின் அந்த நூல் இஸ்லாமிய ஏவல், கட்டளைகளைப்பற்றிய ஒரு அட்டவணையையும் வரிசைபடுத்தியிருந்தது. அவை தீனுல் இஸ்லாத்தின் அடிப்படை மற்றும் நெறிமுறைகளை வெளிப்படுத்திக் காட்டிக் கொண்டிருந்தது. அவை இதுதான்,.......

1. ஏகத்துவ நம்பிக்கை. சகோதரத்துவம் பற்றிய கட்டளை. இன்னும் பிரிந்து விடாதிருத்தல்.

2. கல்வியறிவு பெற வேண்டியதன் அவசியம் குறித்த கட்டளை.

3. பல தேசங்களை சுற்றிப்பார்த்து படிப்பினை பெறுதல் பற்றிய கட்டளை.

4. வாழ்வை வளமாக்கிக் கொள்வது பற்றிய கட்டளை.

5. வாழ்வியல் நடைமுறைகளில் பெரியோரின் ஆலோசனையை கேட்டு வழுவுதல் பற்றிய கட்டளை.

6. அரசர்களுக்கு கட்டுப்பட்ட வாழ்க்கைநடத்துதல் பற்றியகட்டளை.

7. நபிகளாரின் ஹதீஸ்களது அடிப்படையில் சுகாதாரம் மற்றும் மருத்துவம் பற்றிய கட்டளை.

## கல்விகள் நான்கு வகை :

A. மார்க்கச் சட்டம் பற்றிய கல்வி, மார்க்கத்தை பாதுகாப்பதற்காக.

B. மருத்துவம் பற்றிய கல்வி. தேக ஆரோக்கியப் பாதுகாப்பிற்காக.

C. இலக்கணம் பற்றிய கல்வி. பேச்சின் பாதுகாப்பிற்காக.

D. வானசாஸ்திரம் பற்றியகல்வி. காலத்தை அறிந்துகொள்வதற்காக.

8. முன்னேறுவதற்குரிய கட்டளை.

9. தமது காரியங்களை முறைபடுத்தி அமைத்துக் கொள்ளல் பற்றிய கட்டளை.

10. அன்றுட ஜீவனத்தில் தன்னிறைவு பெறுதல் பற்றிய கட்டளை.

11. புதிய புதிய நவீன ஆயுதங்களையும் போர்க்கருவிகளையும் கொண்டு படைகளை ஒழுங்குபடுத்திக் கொள்வது பற்றிய கட்டளை.

12. பெண்களின் உரிமைகளை பாதுகாத்தல், அவர்களை மரியாதை

யுடன் நடத்துதல் பற்றிய கட்டளை.

13. தூய்மை, மற்றும் சுத்தமாக இருத்தல் பற்றிய கட்டளை.

இவைகளை விபரித்தபின் நூல் தனது அடுத்த அத்தியாயத்தில் இஸ்லாமியர்களின் சக்தி மற்றும் பலத்தையும் இன்னும் முஸ்லிம்களது சிறப்பு நிலைகளைக் குறித்து விபரிக்கின்றது. இனி அவற்றை அழிப்பதன் மூலம் சின்னாபின்னப்படுத்துவதற்குரிய முழுமையான வழிமுறைகளையும், அவர்களுக்கெதிராக மேற்கொள்ள வேண்டிய நடவடிக்கைகள் குறித்தும் வளர்ந்துவரும் நாடுகளின் வெளியுறவுத்துறை அமைச்சகம் விபரிக்கின்றது. இன்னும் இஸ்லாமிய சமூக மக்கள் முன்னேறி தன்னிறைவு பெறுவதற்குரிய பாதைகள் இதுதான்.

1. நிறம், பாரம்பரியம், மொழி, பழக்க வழக்கங்கள் மற்றும் சமூக மக்களிடையே காழ்ப்புணர்வு அறவே இருக்கக் கூடாது.

2. வட்டி, விலைவாசி ஏற்றம், துர் நடத்தை, வெட்கமின்மை மற்றும் பன்றி இறைச்சியை உண்ணுதல் போன்றவற்றைக் குறித்த தடை.

3. ஈமான் மற்றும் அகீதாவின் அடிப்படையில் மார்க்க அறிஞர்களான உலமாக்களிடம் கொண்டுள்ள நெருக்கம். மற்றும் அளவுகடந்த நேசம்.

4. தற்போதுள்ள கலீபாக்களின் மீது முஸ்லிம்கள் கொண்டுள்ள கண்ணியம், நம்பிக்கை. இன்னும் இந்த நம்பிக்கை அவர்களை நபிகளாரின் பிரதிநிதிகளாகவும், மற்றும் நபிகளாரின் கட்டளையை பிரதிபலிப்பவராகவும் நம்புதல். இந்த அடிப்படையில் கலீபாக்களின் கட்டளையை ஏற்று வழிப்படுதல் அல்லாஹ் மற்றும் அவனது தூதரின் கட்டளைக்கு வழிப்பட்டதாக நம்பிச் செயல்படுதல்.

5. காபிர்களுக்கெதிராக ஜிஹாத் பற்றிய அவசியம்.

6. முஸ்லிமல்லாதோரை அசுத்தமானவர்களென்று நம்புதல் ஷியாக்களின் நம்பிக்கை.

7. எல்லா மார்க்கம் மற்றும் மதங்களைவிட இஸ்லாம் மட்டுமே சிறந்ததென்னும் நம்பிக்கை.

8. இஸ்லாமியர் வசிக்கும் பகுதிகளில் யூத, கிறிஸ்தவர்களின் வணக்கஸ்தலங்களை நிர்மாணித்தல் பற்றிய ஷியாக்களின் தடை.

9. அரபுப் பகுதிகளிலிருந்து எல்லா யூத, கிறிஸ்தவர்களையும் வெளியேற்ற வேண்டுமென்பதில் பெரும்பாலான முஸ்லிம்களின் கருத்தொற்றுமை.

10. மிகுந்த விருப்பத்துடன் தொழுகை, நோன்பு, ஹஜ் போன்ற பர்ளான கடமைகளை இடைவிடாது நிறைவேற்றுதல்.

11. ஐந்தில் ஒரு பாகத்தை கொடுப்பது பற்றிய ஷியாக்களின் அகீதா. இன்னும் உலமாக்களின் மூலம் அத்தொகையை உரிமையுடை

யோருக்கு பிரித்துக் கொடுத்தல்.

12. ஈமான் மற்றும் கலப்பற்ற எண்ணத்தோடு இஸ்லாமியக் கொள் கையின் மீது கொள்ளப்பட்டுள்ள திருப்தி நிலை.

13. வீட்டிலுள்ள பெரியோர்களின் கட்டளைக்கு வழிப்பட்டு நடக்கும் அடிப்படையுடன் குழந்தைகள் வாலிபர்கள் போன்றோருக்கு ரிவாயத்துடைய செய்திகளைக்கூறி பழக்கப்படுத்தி வருதல். இன்னும் பிள்ளைகளை பெற்றோருடன் இணக்கமாக எப்போதும் நடக்க வேண்டியதன் அவசியம் குறித்த உபதேசங்கள்.

14. பெண்களுக்கு பர்தாவின் அவசியம் குறித்த கட்டளை. அவை ஷரீஅத்துக்கு மாற்றமான பழக்க வழக்கங்களிலிருந்தும், துர் நடத்தையி லிருந்தும் பெண்களைத் தடுக்கின்றன.

15. கூட்டுத் தொழுகையின் மீதுள்ள விருப்பம். இன்னும் எல்லோ ரும் ஒரு நாளில் பலமுறை மஸ்ஜிதில் ஒருங்கிணையும் முறை.

16. அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் குடும்பத்தினர்களான அஹ்லெ பைத்துக்கள், உலமாக்கள் மற்றும் சாலி ஹீன்களான நல்லோர்களின் ஜியாரத்திற்குரிய ஸ்தலங்களை கண்ணியப் படுத்துதல். இன்னும் அந்த ஸ்தலங்களை ஒன்று சேருவதற்கும், சந்திப் பதற்குமுரிய மர்கஜாக அமைத்துக்கொள்ளல்.

17. ஸாதாத்துகளான நபிகளாரின் வம்சத்தினரை கண்ணியப்படுத்து தல். இன்னும் நபிகளாரைப்பற்றி அவர்கள் இன்றும் உயிருடனுள்ளனர் என்றும், ஸலவாத்திற்கும், ஸலாமுக்கும் உரியவர்கள் என்றும் நம்புதல்.

18. ஷியாக்களால் நடத்தப்படும் கூட்டங்கள். குறிப்பாக முஹர்ரம் ஸபர் போன்ற மாதங்களில் ஒருங்கிணையும் கூட்டம். அதில் உலமாக் களின் சொற்பொழிவுகள். அவை நிச்சயம் முஸ்லிம்களின் ஈமானை புத்துயிர் பெறச்செய்து விடுகின்றன. இன்னும் அவர்களை நன்னடத்தை கொண்டவர்களாகவும் செயல்படத் தூண்டுகின்றன.

19. இஸ்லாமிய அடிப்படை கட்டளைகளில் நன்மையை ஏவி தீமை யைத் தடுத்தல் பற்றிய கடமை.

20. திருமணம், அதிகப் பிள்ளைகளை பெற்றுக் கொள்ளல், ஒன் றுக்கு மேற்பட்டோரை திருமணம் செய்தல் விருப்பத்திற்குரிய செயலாக்கப் படுதல்.

21. காபிர்களை நல்வழிப்படுத்தலில் தீவிரத்தை கையாளுதல். அதில் எந்தக் காபிரையாவது ஒருவர் முஸ்லிமாக்கி விட்டால் அது அவருக்கு உலகின் அனைத்து செல்வங்களை விட உன்னதமான ஒன்று என்பதாக நம்புதல்.

22. நற்செயல் புரிவதற்குரிய முக்கியத்துவம், எவரேனும் ஒரு நல்லதைப் பின்பற்றினால் அவருக்கு இரு நன்மைகள் கிடைக்கின்றன.

ஒன்று அதனை அவர் செயல்படுத்தியதற்கும், மற்றொன்று அதனை செயல் படுத்தத் தூண்டியதற்கும் கிடைக்கின்றன.

23. குர்ஆன் ஹதீஸின்மீது அளவற்ற மதிப்பு. இன்னும் மறுமை யின் நன்மைக்காக அவற்றை பின்பற்றி அமல்செய்வது தன்மீது மிக மிகக் கடுமையான அவசியம் என நம்புதல்.

இஸ்லாமிய மார்க்கத்தின் பலம், சக்தியை விபரித்த அந்நூல் அடுத்த அத்தியாயத்தில் மிக அழுத்தமாக நிலை பெற்றிருந்த அத்தூண்களை பல வீனப்படுத்துவதற்குரிய செயல்முறை திட்டங்களை மிகுந்த ஆதாரத்தோடு எடுத்துக் காட்டியிருந்தது. அதன்பின் மேற்கொள்ள வேண்டிய நடவடிக்கை பற்றிய திட்டங்களைக் குறித்து தலைப்புக்கள் இட்டு வரிசைப்படுத்தப்பட் டிருந்தன. அவற்றை கொண்டு இஸ்லாமிய உலகை பலவீனப்படுத்த முடியும்.

1. சந்தேகத்தையும், தவறான எண்ணங்களையும் மையப்படுத்தி ஷியா மற்றும் சுன்னி முஸ்லிம்களுக்கிடையே மார்க்கத்தில் பிளவை ஏற்படுத்த வேண்டும். இன்னும் இரு பிரிவினருக்குமிடையே ஒருவர்மற்றவரை தாக்கி யும், இழிவுபடுத்தியும் எழுதவேண்டும். இக்கபட நாடகம், மற்றும் பிரிவினை யை உருவாக்க ஏற்படும் மிகப்பெரும் செலவைப்பற்றி நாம் கவலைப்படக் கூடாது.

2. முஸ்லிம்களை கல்வியற்றவர்களாகவும், மடமைவாதிகளாகவும் ஆக்க வேண்டும். எந்த கல்வி ஸ்தாபனங்களையும் வளர விடக்கூடாது. எழுத்துக்கள், நூல்கள் வெளியிடுவதில் கட்டுப்பாட்டை ஏற்படுத்த வேண் டும். அவசியம் நேர்ந்தால் பாமர மக்களின் நூல் நிலையங்களை தீ வைத்து கொளுத்திவிட வேண்டும். பிள்ளைகள் மத்ரஸாவிற்கு செல்வதை தடுப்பதற்காக உலமாக்கள் மீதும் மத்ரஸாக்களின் மீதும் இல்லாத பொல் லாத அபவாதங்களைச் சுமத்த வேண்டும்.

3. சோம்பேறித்தனத்தை வளர்த்து வாழ்வின் மீதுள்ள பிடிப்பை அகற்றுவதற்காக வேண்டி மரணத்திற்குப் பின்னுள்ள மறுமை வாழ்க்கை யில் கிடைக்கவிருக்கும் சுகத்தையும், சுவனத்தைப் பற்றியும் எந்த அளவுக் குத் தூண்ட வேண்டுமெனில், அவை உருவம் பெற்று அவர்களின் மண் டையிலும், இதயத்திலும் நிலை பெற்றுவிட வேண்டும். இன்னும் அவர்கள் அவற்றை பெற்றுக்கொள்வதற்காக தமது பிழைப்பை விட்டுவிட்டு மலக் குல் மௌத்தை எதிர்பார்த்து அமர்ந்திருக்க வேண்டும்.

4. எல்லா பக்கமும் தர்வேஷ்களின் கான்காக்களையும், இன்னும் இப்படிப்பட்ட நூல்களையும், சஞ்சிகைகளையும் அச்சிட்டு வெளிக் கொண்டு வர வேண்டும். இதன்மூலம் அவர்களை நடைமுறை வாழ்க்கையை விட் டும் அகற்றி உலகைவெறுத்து தனிமையைத் தேடிச்செல்ல வைக்க வேண்டும். எவ்வாறெனில் இமாம் கஜ்ஜாலியின் இஹ்யாவுல் உலூம், மௌலானா ரூமியின் மஸ்னவீ ஷரீப், இன்னும் முஹ்யித்தீன் அரபி ரஹிம

ஹுமுல்லாஹ் போன்ரேரின் நூல்களாகும்.

5. அராஜகம் புரியும் அரசனையும், தன்னிச்சை போக்குடைய ஆட்சியாளர்களையும் ஆதாரப்படுத்தும் வகையில் விதவிதமான ஹதீஸ் களை வெளியிட வேண்டும். உதாரணமாக, அரசன் பூமியில் அல்லாஹ் வின் நிழலாக இருக்கிறுன் போன்றவைகள். அல்லது ஹஜ்ரத் அபூபக்ர், உமர், உஸ்மான், அலீ, பனீ உமைய்யா இன்னும் பனீ அப்பாஸியாக்கள் போன்ரேர் பகிரங்கமாக வாட்களின் பலத்தில்தான் ஆட்சிக் கட்டிலில் ஏறினர் என்றும், இன்னும் ஆயுதபலத்தின் ஆட்சியை ஒரு வேடிக்கை பொருளாக்கி வெளிக்காட்ட வேண்டும். அதன் ஒரு பக்கத்தின் பிடியை உமர் பிடித்துக் கொண்டிருந்தாரென்றும் ஆதாரப்படுத்த வேண்டும். எவ்வா றெனில், ஹஜ்ரத் அலீயின் ஆதரவாளர்கள், குறிப்பாக அவர்களின் துணைவி ஹஜ்ரத் பாத்திமா வீட்டை எரித்தது போன்றவைகளாகும். அடுத்து இவைகளையும் ஆதாரப்படுத்த வேண்டும்.

1. ஹஜ்ரத் உமர் அவர்களின் கிலாபத் வெளிப்படையாகவே ஹஜ் ரத் அபூபக்ரின் உபதேசத்தின் மீதிருந்ததெனவும், அந்தரங்கத்தில் எதிரிகளை பயமுறுத்த அமைக்கப்பட்டதென்றும்,

2. ஹஜ்ரத் அலீயின் விரோத அடிப்படையில் ஹஜ்ரத் உஸ்மானின் ஏற்பாட்டில் ஒரு டிராமாவை (நாடகம்) ஆலோசனை என்னும் பெயரில் அரங்கேற்றப்பட்டது. முடிவில் விரோதிகளின் கூச்சலில் மூன்ருவது கலீ பாவை கொன்று ஹஜ்ரத் அலீயின் கிலாபத் அமைக்கப்பட்டதென்றும்,

3. பித்தலாட்டம், மோசடித்தனம் மற்றும் வாட்களைக் கொண்டு தான் முஆவியா ஆட்சியை கைப்பற்றினுரென்றும், இன்னும் அந்நிலையில் அவரது குடும்பத்தினரே அவரை ஆமோதித்தனரென்றும்,

4. அபூ முஸ்லிமின் தலைமையில் வெறித்தனமான ஆயுதமேந்திய ஒரு கூட்டம் வாளின் பலத்தால் பனீ அப்பாஸியாக்களின் ஆட்சியை அமைத்ததென்றும்,

5. ஹஜ்ரத் அபூபக்ரிலிருந்து உஸ்மானியாக்களின் இன்றைய ஆட் சியாளர்கள் வரை எல்லா கலீபாக்களுமே ஒரு கடிவாளப்பிடிக்குள் தான் இருந்தனர். அதாவது டிக்டேட்டர்களாக இருந்தனர் என்றும்,..

6. இஸ்லாமிய ஆட்சி எப்போதுமே பிரதி பதிப்பாளர்களின் ஆட்சி யாகத்தான் இருந்து வந்துள்ளது. என்றும்,

7. பாதைகளில் அமைதியின்மையை ஏற்படுத்த வேண்டும். கெட்

டவர்களின் உதவியோடு நகரங்கள், கிராமங்கள் தோறும் குழப்பங்களையும், சச்சரவுகளையும் ஏற்படுத்த வேண்டும். இன்னும் குண்டர்களுக்கும், குழப்பக்காரர்களுக்கும், கொள்ளையர்களுக்கும் பாதுகாப்பளிக்க வேண்டும். மேலும் அவர்களுக்கு ஆயுதங்களை தந்து அவர்களைத் தூண்டிவிட வேண்டும்.

8. பாதுகாப்பான சுகாதார வாழ்வை சீரமைக்கும் முயற்சிக்கு தடைகளை ஏற்படுத்த வேண்டும். இன்னும் ஜப்ர், கத்ர் (மதி, விதி) இயற்கை போன்ற பிரச்னைகளை தீவிரப்படுத்த வேண்டும். இதை இப்படிச் சொல்ல வேண்டும். அனைத்தும் அல்லாஹ்வின் தரப்பைச் சேர்ந்ததென்றும், நோயும் கூட அல்லாஹ்வின் மார்க்கமேயென்றும், இதை ருஜூப் படுத்துவதற்காக, அவன் தான் எனக்கு உணவளிக்கிறான். இன்னும் தாகத்தின் போது தண்ணீர் தருகிறான். இனி நான் வியாதியுற்றால் அவனே எனக்கு சுகத்தை தருகிறான். அவனே அழிக்கிறான். அவனே ஜீவிக்கவும் வைக்கிறான் என்னும் திருக்குர்ஆனின் ஆயத்துக்களை ஓதிக் காட்டி, சுகம் அல்லாஹ்வின் கையிலுள்ளது. மரணமும் ஜீவியமும் அவனது அதிகாரத்திலும், ஆற்றலிலும் அமைந்துள்ளது. நோயிலிருந்து சுகமும், இன்னும் மரணத்திலிருந்து விடுதலையும் அவனது நாட்டமின்றி, ஏற்பாடு இன்றி ஒருக்காலும் நடைபெற முடியாது. இன்னும் நிகழவிருக்கும் இவையனைத்துமே அவனுடைய விதிவசத்தில் அமைந்துள்ளதென்றும் சொல்ல வேண்டும்.

9. இஸ்லாமிய நாடுகளை வறுமையிலும், ஏழ்மையிலும் வைத்திருக்க வேண்டும். அதில் எத்தகைய மாற்றமும் வித்தியாசமும் ஏற்படாது பார்த்துக்கொள்ள வேண்டும். அல்லது அதை மாற்றுவதற்குரிய முயற்சி மேற்கொள்ளப்பட்டால் அதைநாம் முறியடிக்க வேண்டும்.

10. குழப்பங்களையும், சச்சரவுகளையும், கொந்தளிப்பையும் தூண்டிக் கொண்டேயிருக்க வேண்டும். இன்னும் இஸ்லாத்தில் வணக்கமென்றும், பயபக்தியென்றும் கூறப்பட்டிருப்பதை விட்டும் ஜனங்களை பாராமுகப் படுத்த வேண்டும். இன்னும் அவர்களை உலகியல் மற்றும் அவை சம்பந்தமான நிலைகளுக்கும் அவர்களுக்கும் எத்தகையசம்பந்தமும் இல்லையென்ற நிலையை உருவாக்க வேண்டும். நபிகள் நாதரோ அல்லது அவர்களின் குடும்பத்தினரோ எப்போதுமே அவற்றை தெரிந்து கொள்ள முயற்சித்ததே இல்லை. இன்னும் அரசியல் மற்றும் நீதித்துறைகளில் எவருமே பங்கேற்றதில்லை என்றும் சொல்ல வேண்டும்.

11. மேற்கண்ட திட்டத்தை கவனத்துடன் கையாளுவதைக் கொண்டு அமைதியின்மையும், மோசமான நிலைகளும், வறுமையும், கவனமின்மையும் பெருகத்துவங்கும். ஆனால் அத்துடன் பிற்படுத்துகின்ற நிலையை அதிகமாக்

